POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6 - TN - Ms C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# இலங்கை தமிழர் பிரச்னைக்கு தீர்வு என்ன?

Regd. No. TN-MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 9] சென்னை 23-5-1985 வியாழன் ★ வெளியூர் 24-5-1985 வெள்ளி [இதழ் 210

## ரஷ்ய தலைவர்களுடன் பிரதமர் ராஜீவ் ஆலோசனை

**மாஸ்கோ, மே. 23- இலங்கைத்தமிழர் பிரச்சினைக்குத் தீர்வு காண்பது சம்பந்தமாக சோவியத் தலைவர்களுடன் பிரதமர் ராஜீவ்காந்தி கிரெம்ளின் மாளிகையில் பேச்சு நடத்தினார்.**

மத்திய அமைச்சர் குர்ஷித் ஆலம்கானின் இலங்கை எதிர்ப்பு பேச்சை இலங்கை கடுமையாக கண்டித்திருந்தது. இலங்கையின் அந்தச் செயலை டெல்லி கடுமையாக ஆட்சேபித்தது.

விடுதலைப் புலிகள் மீதுள்ள ஆத்திரத்தால், அப்பாவி தமிழ் மக்களை சிங்கள ராணுவம் படுகொலை செய்துவருவதை பிரதமர் ராஜீவ் வன்மையாகக் கண்டித்தார்.

தற்போது சோவியத் யூனியன் சென்றுள்ள பிரதமர் ராஜீவ் சோவியத் தலைவர்களுடன் குறிப்பாக அதிபர் கோர்ப்பசேவுடன் இலங்கை தமிழர் பிரச்சினை குறித்து ஆலோசனை நடத்தினார்.

இது பற்றி நிருபர்களிடம் பிரதமர் ராஜீவ் கூறியதாவது:-

### ராஜீவ் அக்கறை

இலங்கைத்தமிழர் பிரச்சினை சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களையும் சோவியத் தலைவர்களிடம் விளக்கி உள்ளேன்.

சுமுக உடன்பாடு ஏற்படுவதற்கு இந்தியாஎடுத்துக்கொண்ட முயற்சியை சோவியத் தலைவர்கள் பாராட்டினார்கள். இந்தியா எடுத்துள்ள நிலையையும் அவர்கள்வரவேற்றார்கள்.

இலங்கைத் தமிழர் பிரச்சினை உணர்வுகளை தூண்டக்கூடியது-

### புதிய திட்டம்

சுமுகத்தீர்வு ஏற்பட இலங்கை அரசு முயற்சி மேற்கொள்ள வேண்டும். இப்பிரச்னைக்கு அரசியல் ரீதியான தீர்வை விரைவில் காணவேண்டும்இதற்காக புதிய திட்டங்களுடன் முயற்சிகளை இலங்கை அரசு மேற்கொள்ளவேண்டும்.

இவ்வாறு பிரதமர் ராஜீவ்காந்தி கூறினார்.

பிரதமர் ராஜீவின் அதிருப்தியான போக்கு இலங்கைக்கு அச்சத்தை ஏற்படுத்தியுள்ளது.

எனவேபிரதமர் ராஜீவுடன்பேச்சுநடத்த அதிபர் ஜெயவர்த்தனே புது டெல்லிக்கு வர முடிவு செய்துள்ளார்.

தன்னுடன் பேச்சு நடத்த வருமாறு ஜெயவர்த்தனேயை ஏற்கனவே பிரதமர் ராஜீவ் அழைத்திருந்தார் ஆனால் சிங்களவர்கள் மத்தியில் அதுதவறானஎண்ணம்ஏற்படுத்தி விடுமென்று கூறி, அவர் இந்தியாவுக்கு வராமல் மழுப்பிக் கொண்டிருந்தார்.

தற்போது டெல்லி கடுமை காட்டுவதைத் தொடர்ந்து ஜெயவர்த்தனே தனது பிடிவாதத்தைக்கைவிட்டுள்ளார்.

டெல்லி வந்ததும் பிரதமர் ராஜீவுடன் தனியாக ஜெயவர்த்தனே பேச இருக்கிறார்.

## வாலிபர் கோரக்கொலை

சென்னை, மே. 23— சென்னை முத்தியால் பேட்டையைச் சேர்ந்தவர்கள், ராதாகிருஷ்ணன் (வயது 25) ஏழுமலை (வயது 40) இவர்கள் இருவரிடையேயும் அடிக்கடி தகராறு ஏற்படுமாம். இதனால் ராதாகிருஷ்ணன் எண்ணூருக்கு சென்றுவியாபாரம்செய்து வந்தாராம்.

இதற்கிடையில் ராதாகிருஷ்ணன் நண்பர் ஒருவரை ஏழுமலையும் அவரதுஆட்களான கோழிபாபு உள்ளிட்ட சிலர் அடித்துக் கொன்றனராம். இந்த சம்பவம் தொடர்பாக கோழிபாபு கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டார்.

இதற்கிடையில் ராதாகிருஷ்ணன் தனது ஆட்களுடன் வந்துகோழிபாபுவின் தம்பியை அரிவாள் போன்ற ஆயுதங்களால்தாக்கிவிட்டுச்சென்றனராம் ஜாமீனில் வந்த கோழிபாபு இந்த செய்தி கேட்டு நேற்றிரவு தனது ஆட்களுடன்சென்றுராதாகிருஷ்ணனை வழிமறித்து அரிவாளால் துடிதுடிக்க வெட்டிக் கொன்றாராம்.

இந்த சம்பவம்தொடர்பாக திருவொற்றியூர் துணை சூப்பரிண்டெண்ட் அன்வர் அலி உத்தரவின் பேரில் இன்ஸ்பெக்டர் ரவி வழக்கு பதிவு செய்து கோழி பாபுவையும் மற்றவர்களையும் தேடி வருகின்றனர்.



சோவியத்துக்கு விஜயம் செய்துள்ள பிரதமர் ராஜீவ் காந்தியை, மாஸ்கோவில் கொட்டும் மழையில் வரவேற்றபோது எடுத்த படம்

## மதுரை வெடிகுண்டு துப்பு துலங்கியது

**மதுரை, மே. 23- மதுரை பஸ்நிலையத்தில் வெடித்த வெடிகுண்டு சம்பவத்திற்கும் தீவிரவாத இயக்கங்களுக்கும் எந்த விதத் தொடர்பும் இல்லை.**

வெடிகுண்டுகளைச் செய்து கள்ளத்தனமாக விற்று வந்தவர்கள் தான் இந்தச் சம்பவத்திற்குப் பின்னணியாகஇருக்கிறார்கள்.

பாஸ்கரன் (வயது 19) முருகேசன்(வயது18)என்ற இரண்டு இளைஞர்கள் மதுரை பஸ்நிலையத்தில் கைது செய்யப்பட்டார்கள்.

இவர்கள்ராமநாதபுரம் மாவட்டம் வேப்பங்குளத்தைச் சேர்ந்தவர்கள். பட்டாசுத் தொழிற் சாலையில் வேலை பார்ப்பவர்கள். சம்பாதிக்கும்நோக்குடன் கள்ளத்தனமாக வெடிகுண்டுகள் செய்து இவர்கள் விற்பனை செய்து வந்தார்கள்.

### நாட்டு வெடிகுண்டு

தென் மாவட்டங்களில் காடுகளில் பயிர்களை அழிக்க வரும் காட்டுப் பன்றிகள், காட்டுமாடுகளை விரட்ட, விவசாயிகள் நாட்டு வெடிகுண்டுகளை வைப்பார்கள்.

அத்தகைய விவசாயிகளிடம் இவர்கள் வெடிகுண்டுகளை விற்பது வழக்கம். அதே போல் ஒரு வெடிகுண்டை விற்பனை செய்ய இவர்கள்இருவரும் மதுரைக்கு வந்தார்கள்.

பஸ்நிலையத்தில்போலீசாரின் நடமாட்டம் அதிகமாக இருந்தது.

எனவே பயந்து போய் வெடிகுண்டு வைத்திருந்த பையை முகமது மீரானிடம் கொடுத்து விட்டுச் சென்றார்கள்.

அந்தக் குண்டுதான் வெடித்து, இருவரின் உயிரைக்குடித்து தமிழகத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தி விட்டது.

### மர்ம பெண்

முகமது மீரானின் பெட்டிக் கடைக்குத் தினமும் வந்து சென்ற பெண்யார்என்றவிபரமும் தெரிந்திருக்கிறது.

அவர் ஒரு பள்ளி ஆசிரியை, மதுரை புறநகர் பகுதியில் பணி செய்பவர் வீட்டுக்கு வேண்டிய காய்கறிகளை வாங்கி ஒரு பையில் போட்டுகடையில் கொடுத்துவிட்டு போவது வழக்கம்.

பள்ளியிலிருந்து வீடு திரும்பும் போதுபையைப் பெற்றுக் கொண்டு செல்வார்.

அப்படி அவர்கொடுத்து சென்ற பையையும் போலீசார் கைப்பற்றினர். அந்தப்பையில் சேலை துணிமணிகள், கோதுமை. உப்பு ஆகிய பொருள்கள் இருந்தன.

## 18 ஆயிரம் பேருக்கு பாலிடெக்னிக்கில்இடம்

சென்னை, மே 23— தமிழ்நாட்டில் உள்ள சுமார் 110 பாலிடெக்னிக்குகளில்18 ஆயிரத்துக்கும் மேற்பட்ட மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள். சுய முதலீட்டு அடிப்படையில் துவக்கப்பட்ட பாலிடெக்னிக்குகள்மூலம்படிப்பவர்கள் எண்ணிக்கை இரு மடங்காக உயர்ந்துள்ளது

சுய முதலீட்டு திட்டத்தின் கீழ் தற்போது தமிழ் நாட்டில் 50 பாலிடெக்னிக்குகள் துவக்கப்பட்டுள்ளன, வருகிற கல்வி ஆண்டில் மேலும் 8 பாலிடெக்னிக்குகள் திறக்கப்பட உள்ளன, இவ்வாறு அதிகமாக பாலிடெக்னிக்குகள் திறக்கப்படுவதால் அங்கு வசூலிக்கப்படும் நன்கொடையின் அளவு குறையும் என்று தொழிற் கல்வி இயக்குநரக வட்டாரங்கள் தெரிவிக்கின்றன.

இவ்வாறு பல பாலிடெக்னிக்குகள் துவக்கப்படுவதால் 18 ஆயிரத்திற்கும் மேற்பட்ட மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப் படுவார்கள் என்று தெரிகிறது.

சுயமுதலீட்டு திட்டத்தின் கீழ் சுமார் 16 என்ஜினியரிங் கல்லூரிகள் துவக்கப்பட அனுமதி அளிக்கப்பட்டதால் கல்லூரிகளில் இடங்கள் மூன்று மடங்கு அதிகரித்து உள்ளது.

முன்பு என்ஜினியரிங் படிப்பில் எட்டு கல்லூரிகளில் 1,600 பேர் தான் சேர முடிந்தது. தற்போது 4 500-க்கும் மேற்பட்டவர்கள் அந்தக் கல்[illegible] வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

## இந்திய விமானத்தை கடத்த முயற்சி

காட்மாண்டு மே. 23— காட்மாண்டு - டில்லி இடையில் இயங்கும் இந்தியன் ஏர்லைன்ஸ் விமானம் நேற்று (22-ந் தேதி) 88 பயணிகளுடன் கிளம்பத்தயாராக இருந்தது. காங்கிரஸ் நாடாளுமன்ற உறுப்பினரும் பிரபல இந்தி நடிகருமான சுனில்தத்தும் இதில் பயணம் செய்து கொண்டிருந்தார்.

விமானம்கிளம்பஇருந்த நேரத்தில் அநாமதேய டெலிபோன் செய்தி வந்தது. டெலிபோனில் பேசிய மர்ம நபர் கூறிய வார்த்தைகளைத் தொடர்ந்து விமான நிலைய அதிகாரிகள் விமானத்தைக் கிளப்ப வேண்டாம் என்று உத்தரவிட்டு பயணிகள் அனைவரையும் இறக்கினர்.

இதுதொடர்பாகமூன்று சீக்கிய தீவிரவாதிகள் கைது செய்யப்பட்டுஅவர்களிடமிருந்து டிரான்சிஸ்டர் டெடி [illegible]கள் கைப்பற்றப்பட்டன.

## கஞ்சா கடத்தல்: மதுரைசிறையில் தி. மு. க. ரகளை

**மதுரை, மே. 23- கஞ்சாப் பொட்டலத்தை சிறைக்குள் வீசிய சிறுவனை போலீசார் கைது செய்ததை ஆட்சேபித்து தி.மு.க வினர் சிறைக்குள் ரகளை செய்தனர்.**

மறியலில் கைது செய்யபட்ட தி.மு.க. வினர் மதுரை மத்திய சிறையில் வைக்கப்பட்டிருக்கின்றனர்.

இவர்களைப் பார்க்க உறவினர்கள் நண்பர்கள் வருகிறார்கள். எவ்வளவு பேர் வந்தாலும் அவர்களை சிறை அதிகாரிகள் வரிசையாக அனுமதித்துக்கொண்டு வருகின்றனர். பார்க்க வருகின்றவர்கள் கொடுக்கின்ற பொருள்களையும் அனுமதிக்கிறார்கள்.

சிறையில் இருக்கும் தி.மு.க.வினரைப்பார்க்க இன்று(வியாழன்) ஐநூறு பேர் வந்தார்கள். அவர்கள் வரிசை வரிசையாகவந்துகொண்டுஇருந்தனர்.

ஆனால் பிற்பகுதியில் இருந்தவர்கள்சிறைச்சுவர்கள் மீது ஏறி சிறைக்குள் தாங்கள் கொண்டு வந்த பெருட்களை வீச ஆரம்பித்தனர்.

பாண்டி (வயது 14) என்ற பையன் மதுரை கோச்சடைப் பகுதியைச் சார்ந்த முரட்டன் பகுதியைச்சேர்ந்தவன். இவன் பெரிய கஞ்சாப் பொட்டலத்தை சிறைக்குள் வீசினான்.

என்ன பொருளை வீசினாய் என்று சிறைக்கு வெளியே இருந்த போலீசார் அவனிடம்விசாரணை நடத்தினர்.

இந்தத் தகவல் சிறைக்குள் இருந்த திமுகவினருக்குத் தெரிய வந்தது.

கஞ்சாப்பொட்டலம் வீசியபாண்டியைவிடுதலை செய் என்று அவர்கள் சிறைச்சுவர்கள் மீது ஏறி ஆர்ப்பாட்டம் செய்தார்கள். சிறை ஊழியர்கள் எவ்வளவோ வாதாடியும் சுவர்களிலிருந்து இறங்க மறுத்து விட்டனர்.

உடனே சிறை அதிகாரிகள் அவசரபோலீஸ்படையினரை அழைத்தனர். அவர்கள் வந்ததும் சுவர்கள் மீது கூத்தாடிய தி.மு.க. வினர் இறங்கி விட்[டனர்,]

### விடுதலை கோரி ரகளை

மதுரை மத்திய சிறையின் முன்பகுதியில் புதிய கட்டிடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. அந்தக் கட்டிடங்களில் தான் மறியல் திமுகவினர் வைக்கப்பட்டிருக்கிறார்கள்.

நேற்று மாலையும் தி. மு. க.வினர் சுவர்களின் மீது ஏறி ரகளை செய்தனர்.

தி. மு. க. மறியல் நாடகம் நேற்றுடன் முடிந்தது, எனவே கைது செய்யப் பட்டவர்கள் கருணாநிதி உட்பட அனைவரும் விடுதலை செய்யப்படுவார்கள் என்று நேற்று மதுரை மாலைப் பத்திரிக்கை ஒன்றில் செய்தி வெளியாகியிருக்கிறது.

இந்தச் செய்தியை அறிந்த தி.மு.க. வினர் எங்களையும் விடுதலை செய்யுங்கள் என்று கோரி நேற்றும்சுவர்களில் ஏறிக் குதித்துக்கொண்டு கோஷம் போட்டார்கள்.



## புரட்சித்தலைவர் ஆலோசனை

சென்னை, மே 23— முதல்வர் புரட்சித் தலைவரை தலைமைச் செயலகத்தில் தலைமைச் செயலக பிரிவு அதிகாரிகள் சங்க பிரதிநிதிகள் சந்தித்துப்பேசினர். சம்பள கமிஷன் குறித்துஅவர்கள் பேசியதாக தெரிகிறது.

## ரயில்வே போர்டுக்கு புதிய தலைவர்

புதுடெல்லி, மே. 23— ரயில்வே போர்டுதலைவராக பிரகாஷ் நாராயண் நியமிக்கப் பட்டுள்ளார். கப்பல் போக்குவரத்துத் துறை செயலாளராக இருந்தவர்பிரகாஷ் நாராயண்.

ஜூலை 1முதல்இரண்டு ஆண்டுகளுக்கு அவர்இந்த பதவியில் இருப்பார்.

## வீரமரணம் அடைந்த தமிழ் வீரர்

கொழும்பு, மே 23— யாழ்ப்பாணத்தைஅடுத்து குருநகர் பகுதியில் சிங்கள ராணுவம் நரவேட்டையாடியது.

இதனை எதிர்த்துத் ஈழத்தமிழ் இளைஞர்கள் போராடினார்கள்.

ஜெயமோகன் (வாசன்) என்றஇளைஞர்ராணுவத்தினர் மீது வெடிகுண்டை வீசினார்.

இந்தா ராணுவத்தைச் சேர்ந்த மூவர் கொல்லப்பட்டனர் ராணுவத்தினர் சுட்டதால் ஜெயமோகன் வீரமரணம் அடைந்தார்.





**ஆர்வம்**

நீதியை நிலைநாட்டி நேர்மையைவலியுறுத்த மடைமையை மாய்க்க ஆர்வம் வேண்டும்.

—பேரறிஞர் அண்ணா

**கெடுதி**

உண்மையுணர்வு, ஒழுக்கம், நாணயம் இவையில்லை என்றால் அதுவே கெடுதி தான்.

—தந்தை பெரியார்

# இலங்கைதமிழர்பிரச்னை: ஒற்றுமையை குலைத்து தனிவழி போவதா?

## அமைச்சர் காளிமுத்து கண்டனம்

திருநெல்வேலி, மே. 23- இலங்கைத் தமிழர் பிரச்சினையில், இங்குள்ள கட்சிகள் ஒற்றுமையாகப் பாடுபட வேண்டும். அதை விடுத்து தனிவழி போவதால் எந்தப் பயனும் கிடையாது என்று அமைச்சர் காளிமுத்து கூறினார்.

சங்கரன் கோவிலில் கழக சட்டமன்ற உறுப்பினர் சங்கரலிங்கத்தை பாராட்டி பொதுகூட்டம் நடந்தது. மு. கோவிந்தன் தலைமை வகித்தார். கூட்டத்தில் கலந்து கொண்டு சங்கரலிங்கத்தை பாராட்டி அமைச்சர் காளிமுத்து பேசியதாவது:-

தேர்தல் தோல்வியால் ஏற்பட்ட விரக்தியை தாங்கிக்கொள்ள முடியாத கருணாநிதி விரக்தியை போக்க, இலங்கை தமிழர் பிரச்சினைக்காக போராட்டம் நடத்துகின்றார்.

இலங்கைதமிழர்பிரச்னை உயிர் பிரச்னை அதை ஊறுகாய் பிரச்சனைஆக்க கூடாது என்கிறார் கருணாநிதி.

இலங்கைப் பிரச்சினை உயிர் பிரச்னை என்றால் தேர்தல்அறிக்கையிலேயே கூறியிருக்கவேண்டும். அப்போதுகருணாநிதிஇதைப் பற்றி பேச வில்லை.

### கூட்டணி குழப்பம்

தனி ஈழம் வேண்டுமென்று கருணாநிதி கூறுகிறார். தனி ஈழம் கூடாதுஎன்றுமார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கூறுகிறது. கூட்டணி கட்சிகளுக்குள்ளேயே குழப்பம் இருக்கிறது.

கருணாநிதி ஏதோ உள் நோக்கத்துடன் இலங்கைத் தமிழர் பிரச்சினையில் போராட்டம் நடத்துகிறார்.

சட்டசபை உறுப்பினர் பதவியை கருணாநிதி எதற்காக ராஜினாமா செய்தார்? காங்கிரஸ் கட்சிக்கு அதிக உறுப்பினர்கள் சேர்ந்து எதிர்க்கட்சியாகஆகிவிடும்போல் இருந்தது. அது தனக்கு அவமானம் என்று கருதி இலங்கைத் தமிழர்களுக்காக ராஜினாமா செய்வதாக கூறினார்.

கருணாநிதிராஜினாமா செய்ததால் இடைத் தேர்தல் வந்தது. அந்த தேர்தலில் இலங்கைப் பிரச்சினைப் பற்றி பேசவேயில்லை.

### தவறுக்கு தண்டனை

இப்போது இலங்கைப் பிரச்சினைக்காகபோராட்டம் நடத்தி சிறைக்குப் போயிருக்கிறார். கிடைத்தால் முதல்வர் சிம்மாசனம். இல்லையேல் சிறைக்குப் போவேன் என்று போயிருக்கிறார்.

கருணாநிதிமுதல்வராக இருந்தபோது தானே கச்சத்தீவை கொடுத்தார் பண்டார நாயகாவுக்கு மாலைபோட்டு வரவேற்றார். குட்டிமணியைக் காட்டிக் கொடுத்தார்.

கருணாநிதி முதலமைச்சராக இருந்தபோது செய்த தவறுகளுக்கு தானே தண்டனை தந்து கொள்ள சிறைசாலைக் குப்போயிருக்கிறார்.

தி. மு. க. தொண்டர்களை ஏன் சிறைக்கு அனுப்புகிறார். தி.மு.க. சரிந்துவிட்டது உண்மை. தந்தைப் பெரியார், பேரறிஞர் அண்ணா வழியில் நடக்கும் உண்மையான திராவிட இயக்கம் அனைதிந்திய அண்ணா திமுகழகம்தான். எனவே இங்கே திமுக தொண்டர்கள் வந்து விடுவார்கள். இவர்களை வெளியே விட்டால் கழகத்திற்கு வந்து விடுவார்கள் என்று திமுக தொண்டர்களை உள்ளே வைத்துப் பாதுகாக்க சிறைச்சாலைக்கு அனுப்பிஇருக்கிறார்.

### போராட்டம் ஏன்?

தென்னைமரத்தில் ஏறி வாழைப்பழத்தை தேடுவது போல, இலங்கைத் தமிழர் பிரச்னை தீர இங்கே போராட்டம் நடத்தி பயனில்லை.

இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கு காரணம் அங்குள்ள தமிழர்களுக்கு இடையேஉள்ள ஒற்றுமை குலைவு. அவர்களின் கண்ணீரைத் துடைக்க இங்கே நாம் ஒன்றுபட வேண்டாமா?

அதற்குகருணாநிதி ஒத்துழைப்பு தர வேண்டும். சிறைச்சாலையில் ஓய்வு கிடைக்கும் போது கருணாநிதி சிந்திக்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.

கூட்டத்தில் நெல்லை மாவட்ட கழகச் செயலாளர் வீ, கருப்பசாமி பாண்டியன் சட்டமன்ற உறுப்பினர்கள், பாளை நாராயணன், சுப்பிரமணிய ஆதித்தன், பாலசுப்பிரமணியம் மற்றும் பலர் பேசினார்கள்.

பாராட்டுக்கு நன்றி தெரிவித்து சங்கரலிங்கம் பேசினார்.

### தேவர் சிலை திறப்பு

நெல்லை மாவட்டம் வையக் கவுண்டன்பட்டியில்ரூபாய்25ஆயிரம்செலவில் உருவாக்கப்பட்ட பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் சிலை திறப்பு விழா நடைபெற்றது. வீ. கருப்பசாமி பாண்டியன் தலைமை வகித்தார்.

வேளாண்மைத் துறை அமைச்சர் டாக்டர் கா. காளிமுத்து தேவர் சிலையைத்திறந்து வைத்துப்பேசினார்.

புலவர் காளியப்பன் துரைராஜி, கே.பி.கணபதி ஆகியோரும் பேசினார்கள்.

# கண்டமனூர் தி. மு .க. இளைஞர் அணி கலைப்பு

தேனி, மே. 23— கழகத்தின் நன்றி அறிவிப்புக்கூட்டமும் சட்டமன்ற நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு பாராட்டு விழாக்கூட்டமும் தேனியில் பகவதி அம்மன் கோவில் தெருவில் கடந்த மே 18ந்தேதி நடைபெற்றது.

இதில் சட்டமன்ற உறுப்பினர்கள் வி. ஆர். ஜெயராமன், சுப்பராயர் சலீம், டாக்டர் மாரிமுத்து, இ. வா. முத்தையா, பெரியகுளம் நாடாளு மன்ற உறுப்பினர் செல்வேந்திரன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

கூட்டத்தில் அமைச்சர் ப. உ. ச. முன்னிலையில் சுமார் 100 தொண்டர்களோடு கண்டமனூர் திமுக இளைஞர் அணிச் செயலாளர் சி. ராஜேந்திரன் கழகத்தில் இணைந்தார்.

முடிவில் .. முதல்வர் மருத்துவ செலவு நிதிக்கு ரூபாய் 51 அமைச்சரிடம் வழங்கப்பட்டது.

### சுப்பு எம்.எல்.சி நிகழ்ச்சிகள்

மே 24 விருதுநகர் (திருமண நிகழ்ச்சி)
27 செங்கற்பட்டு (என். ஜி. ஓ. சங்க பொதுக்கூட்டம்)
28 29 30 சென்னை பொதுக்கூட்டங்கள்.
31 பண்ருட்டி பொதுக்கூட்டம்
ஜூன் 1- வடலூர் பொதுக்கூட்டம்
2- அரக்கோணம் பொதுக்கூட்டம்
3- சென்னை பூங்கா நகர் பொதுக்கூட்டம்
6- வெங்கல் திருமண நிகழ்ச்சி
8, 9- தஞ்சை மாவட்ட பொதுக்கூட்டம்

# கடன் உதவிபெற கிராம குழுக்கள்: ப. உ. ச. அறிவிப்பு

சாத்தூர், மே. 23- ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டம் மற்றும் கிராமத்தில் உள்ள ஏழை எளிய மக்கள் கடன் உதவி பெறுவதற்கு கிராம அளவில் குழுக்கள் அமைக்கப்படும் என்று அமைச்சர் ப. உ, ச. தெரிவித்தார்.

சாத்தூரில் 7 லட்சத்து ஐந்தாயிரம் ரூபாய் செலவில் புதிதாகக் கட்டப்படுள்ள அண்ணா பவள விழா பேருந்து நிலையக்கட்டிடத்தை கூட்டுறவுத்துறை அமைச்சர் கே.கே.எஸ். எஸ். ஆர். இராமச்சந்திரன் தலைமையில்உள்ளாட்சித் துறை அமைச்சர் ப.உ.ச. திறந்து வைத்தார். விழாவில் கலந்து கொண்டு மாவட்ட ஆட்சித்தலைவர் எல். என். விஜயராகவன் பேசினார்.

கட்டிடத்தை திறந்து வைத்துஅமைச்சர் ப.உ.ச பேசுகையில்கூறியதாவது:

பெருந்தலைவர் காமராஜர் பெயரால் அமைக்கப்பட்டுள்ள இம்மாவட்டத்தின் நிகழ்ச்சியில் கலந்துகொள்வதில் நான் மகிழ்ச்சி யடைகிறேன். கூட்டுறவுத்துறை அமைச்சர் கேட்டது போல் நகராட்சிக்குக் கட்டிடம் கட்டுவதற்கு நகராட்சியின் கல்வி நிதியிலிருந்து தேவையான பணத்தை எடுத்துக்கொள்ள அரசு அனுமதிக்கும்.

### குழு அமைப்பு

ஐ. ஆர். டி. பி. மற்றும் ஐ. ஆர். இ. பி. போன்ற திட்டங்களை நிறைவேற்றுவதற்கும், கிராமத்தில் உள்ள ஏழை மக்களுக்கு கடன் உதவி வழங்குவதற்கும் கிராம அளவில் ஒரு குழு அமைக்கப்படும். தற்போது இக்கடன் வழங்கும் பணியை மேற்கொண்டுள்ள கிராம நல அலுவலர்களின் வேலைப் பளுவைக் குறைக்கும்பொருட்டு இந் நடவடிக்கை எடுக்கப் பட்டுள்ளது.

### சீருடை

வரும் ஆண்டில் பள்ளிக் குழந்தைகளுக்கு சத்துணவுதிட்டத்தோடு இலவச சீருடை புத்தகங்கள் வழங்கும் திட்டத்தையும் அமல் படுத்த முதல்வர் திட்டம் தீட்டியுள்ளார். அரசின் நலத் திட்டங்களுக்கு மக்கள் பேராதரவு தர வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ப.உ.ச. கூறினார்.

### குடிநீர் திட்டம்

கூட்டுறவுத்துறை அமைச்சர் பேசும்போது, சாத்தூருக்குதாமிரபரணி ஆற்றிலிருந்து குடிதண்ணீர் சப்ளை செய்ய ரூபாய் 10 லட்சம் செலவில் திட்டம் அமல்படுத்த உள்ளது. தொழில்துறை அமைச்சரிடம் பேசிசாத்தூரிலிருந்து சிவகாசி ரோடில்சிப்காட் அமைத்திட அனுமதி பெறப்பட்டுள்ளது. இதைபோல் இந்நகருக்கு நகராட்சி கட்டிடம் கட்ட கல்விநிதியிலிருந்து ரூபாய் 8 லட்சத்தை எடுத்து செலவிட அனுமதிக்க வேண்டும்என்றுகூறினார்.

### ரூ. 2 கோடி

மாவட்டக் கலெக்டர் பேசும் போது, வேலை வாய்ப்பு உறுதித் திட்டத்தின்கீழ்85-86ம் ஆண்டிற்கு காமராஜர் மாவட்டத்திற்கு ரூபாய்23 இலட்சம் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. 84- 85ல் இதற்கு ரூபாய் 2 கோடி ஒதுக்கீடுசெய்யப்பட்டது. தற்போது இது மிகவும் குறைவு. எனவே இந் நிதியை அதிகப்படுத்த வேண்டும். மேலும்மாவட்டத் தலைநகரான விருதுநகருக்குஇதுபோல்பெரிய பேருந்துநிலையம்அமைத்திட உதவவேண்டும் எனக் கூறினார்.

விழாவிற்கு வந்திருந்தவர்களை சாத்தூர் நகராட்சி தனி அலுவலர் ரங்கராஜன்வரவேற்றார். விழாவில் சட்டமன்ற உறுப்பினர்கள் பிச்சை பாலகிருஷ்ணன் முத்துவேல் ஆகியோரும் முன்னாள் சட்ட மன்ற உறுப்பினர் ஆர்.கே.பெருமாள் ஆகியோரும் பேசினார்கள். விழா முடிவில் நகராட்சி ஆணையர் ராமச்சந்திரன் நன்றி கூறினார்.

இவ்விழாவில் மாவட்ட மக்கள் தொடர்பு அலுவலர் தீனதயாளன், உதவி மக்கள் தொடர்பு அலுவலர் ராவணன், கோட்டாட்சித்தலைவர் சஞ்சீவி ஆகியோர் கலந்துகொண்டனர்.

# புரட்சித்தலைவர் மருத்துவச் செலவு நிதி

முதல்வர் புரட்சித்தலைவர் மருத்துவச் செலவு நிதிக்காக தலைமைக்கழகத்திற்கு வந்துள்ள நிதி விவரம் வருமாறு.

**தந்தை பெரியார் போக்கு வரத்துக் கழகம் (பண்ருட்டிகிளை)**

| | ரூபாய் |
|---|---|
| திரு ஏ ஜெயசீலன் | 22 35 |
| திரு வி ராமலிங்கம் | 15 00 |
| திரு எம் அண்ணாதுரை | 15 00 |
| திரு பி ராகவன் | 15 00 |
| திரு ஆர் சிகாமணி | 15 00 |
| திரு ஜி தினகரன் | 15 00 |
| திரு ஏ கன்னியப்பன் | 13 00 |
| திரு கே தக்ஷிணாமூர்த்தி | 13 00 |
| திரு பி பாண்டியன் | 13 00 |
| திரு ஏ சுகுமார் | 13 00 |
| திரு எம் சிவபூஷணம் | 13 00 |
| திரு ஏ சிவகுருநாதன் | 11 00 |
| திரு ஜி கோபாலகிருஷ்ணன் | 11 00 |
| திரு எஸ் சுப்பிரமணியம் | 11 00 |
| திரு டி சக்திவேலு | 11 00 |
| திரு ஆர் முருகையன் | 11 00 |
| திரு வி ஜெயராமன் | 28 40 |
| திரு டி கிருஷ்ணமூர்த்தி | 26 15 |
| திரு பி சாமிக்கண்ணு | 22 65 |
| திரு [illegible] ஆறுமுகம் | 24 35 |

**தந்தைபெரியார் போக்குவரத்துக் கழகம் (கள்ளக்குறிச்சி கிளை)**

| | |
|---|---|
| திரு ஆர் சீனிவாசன் | 28 00 |
| திரு என் முத்துசாமி | 27 25 |
| திரு என் பொன்னுசாமி | 26 90 |
| திரு என் சின்னசாமிப்பிள்ளை | 24 60 |
| திரு ஜி ஞானபூஷன் | 25 00 |
| திரு எம் செல்வராஜ் | 23 85 |
| திரு எம் சுப்பிரமணியன் | 21 60 |
| திரு எஸ் குழந்தைசாமி | 12 00 |
| திரு பி குழந்தைவேலு | 39 55 |
| திரு ஆர். தயாளன் | 29 50 |
| திரு பி நடராஜன் | 27 25 |
| திரு டி மோகன் | 22 35 |
| திரு பி புருஷோத்தமன் | 26 65 |
| திரு பி ஆறுமுகம் | 22 35 |
| திரு அன்வர் பாஷா | 25 75 |
| திரு என் கோவிந்தன் | 25 00 |
| திரு என் கோவிந்தன் | 25 00 |
| திரு எம் பி அருணாசலம் | 24 60 |
| திரு ஆர் பலராமன் | 24 60 |
| திரு எஸ் ராமச்சந்திரன் | 24 60 |
| திரு ஆர் ஞானராஜ் | 24 60 |
| திரு ஜி வெங்கட்ராமன் | 24 60 |
| திரு பி மனோகர் | 24 35 |
| திரு என் ரத்தினம் | 24 60 |
| திரு பி பாலசுப்பிரமணியம் | 49 20 |
| திரு ஆர் பரமசிவம் | 24 60 |
| திரு எம் யாகூப் | 24 60 |
| திரு எஸ் ஜீவரத்தினம் | 24 35 |
| திரு ஆர் கனகவேல் | 24 60 |
| திரு காளியப்பன் | 24 60 |
| திரு டி கருப்பஞ்செட்டி | 123 00 |
| திரு எஸ் பெரியசாமி | 24 60 |
| திரு ஏ செல்லப்பதாயார் | 24 35 |
| திரு ஏ ராமதாஸ் | 24 35 |
| திரு வி பாவாடை | 24 35 |
| திரு பி பொன்னுசாமி | 24 35 |
| திரு எஸ் காதர் | 24 35 |
| திரு எஸ் கணேசன் | 15 00 |
| திரு வி ராதாகிருஷ்ணன் | 15 00 |
| திரு வி ராமலிங்கம் | 15 00 |
| திரு சி கலியபெருமாள் | 15 00 |
| திரு பழனிச்சாமி | 15 00 |
| திரு ஆர் ராஜலிங்கம் | 13 00 |
| திரு எஸ் சம்மந்தம் | 13 00 |
| திரு பி திருமலை | 13 00 |
| திரு பி கணபதி | 13 00 |
| திரு வி மணி | 13 00 |
| திரு ஏ அகமத் | 30 75 |
| திரு பஷீர் | 28 00 |
| திரு எஸ் தனபால் | 26 15 |
| திரு ஆர் வெங்கட்கிருஷ்ணன் | 26 90 |
| திரு ஏ ஜான்பாஷா | 26 90 |
| திரு வி வீரமூர்த்தி | 26 15 |
| திரு டி கந்தன் | 26 15 |
| திரு வி முகமதுகலீல் | 50 70 |
| திரு என் குமரைய்யா | 25 75 |
| திரு கே ஏ ரமணன் | 25 75 |
| திரு ஏ சுந்தரமூர்த்தி | 25 00 |
| திரு ஜே ஜெயசிங் | 25 00 |
| திரு டி கண்ணன் | 24 70 |
| திரு எம் விஸ்வலிங்கம் | 25 00 |
| திரு ஜி கிருஷ்ணன் | 125 00 |
| திரு எஸ் பெருமாள் | 25 00 |
| திரு ஐ நஜிமுதீன் | 25 00 |
| திரு எச் பி லியாகத் அலி | 25 00 |
| திரு என் அருணாசலம் | 25 00 |
| திரு என் துரைராஜ் | 24 70 |
| திரு பி விஸ்வநாதன் | 24 70 |
| திரு எஸ் ராஜன் | 24 70 |
| திரு ஏ கேசவன் | 25 00 |
| திரு எஸ் [illegible] ராமன் | 25 00 |
| திரு என் [illegible] | 25 00 |
| திரு [illegible] ஷா பஷீர் | 24 70 |

# ஜோதி அம்மாள் இல்லம் சென்று புரட்சித்தலைவர் நலம் விசாரித்தார்

சென்னை, மே. 23 கேரள முன்னாள் ஆளுநர் ஜோதி அம்மாளை முதல்வர் புரட்சித்தலைவர் பார்த்து நலம் விசாரித்தார்.

கடந்த சில மாதங்களாக ஜோதி அம்மாள் உடல் நலம் குன்றி இருந்தார். இது பற்றிய செய்தி அறிந்ததும் முதல்வர் புரட்சித் தலைவர் நேற்று (புதன்கிழமை) காலை 10மணிக்கு வேப்பேரி ஆண்டர்சன் சாலையிலுள்ள ஜோதிஅம்மாள் இல்லம் சென்றார்.

முதல்வர் புரட்சித்தலைவருடன் அமைச்சர் அண்டேயும் சென்று, ஜோதிஅம்மாளிடம் நலம் விசாரித்தார். முதல்வர் புரட்சித் தலைவரும், ஜோதியம்மாளும் அரைமணி நேரம் உரையாடிக்கொண்டிருந்தனர்.

பின்னர் ஜோதி அம்மாளிடம் விடை பெற்றுக் கொண்டு முதல்வர் புரட்சித்தலைவர் தமது இல்லத்துக்கு புறப்பட்டார். வாசல் வரைவந்து முதல்வர் புரட்சித் தலைவரை ஜோதி அம்மாள் வழி அனுப்பி வைத்தபர்,

முதல்வரிடம் பேசியது பற்றி ஜோதி அம்மாள் கூறியதாவது:-

எனது கணவர் இருக்கும் போதிலிருந்து, முதல்வர் எம்.ஜி.ஆர் எங்கள் குடும்ப நண்பராக இருந்து வருகிறார். எங்கள்குடும்பத்தில்நடக்கும் எல்லா நிகழ்ச்சிகளிலும்கலந்து கொள்வார். அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வருவார்.

எனக்கு உடல்நலம் சரி இல்லாததால் அமெரிக்காவிலிருந்து அவர் திரும்பியபிறகு அவரைப் பார்க்க முடியவில்லை.

தமது உடல் நிலையையும் பொருட்படுத்தாமல் அவர் என்னை சந்தித்து உடல் நலம் விசாரித்தார். பழைய எம்.ஜி.ஆராக நல்ல உற்சாகத்துடன் இருக்கிறார்.

அவருடைய உடல்நிலை இந்த அளவுக்கு தேறியது உலக அதிசயம் ஆகும். நன்றாகப் பேசுகிறார். அவர் விரைவில் தங்கு தடையின்றிப்பேசஆண்டவனைபிரார்த்திக்கிறேன்.

இவ்வாறு ஜோதிஅம்மாள் கூறினார்,

# குடிநீர் வசதியைப் பெருக்க தமிழகத்தில் 600 குழாய் கிணறுகள்

கடலூர், மே 23- தமிழகத்தில் குடிநீர் வசதியை பெருக்குவதற்கு மேலும் 600 குழாய் கிணறுகள் அமைக்கப்படவிருக்கின்றன.

தமிழக அரசு வருவாய்த்துறை கமிஷனரும் செயலாளருமான ஏ. பத்மநாபன் தென்னாற்காடு மாவட்டத்தில் சில கிராமங்களுக்குச் சென்று குடிதண்ணீர் நிலைமை பற்றி சுற்றி பார்த்தார்.

அதன்பின் திண்டிவனம் வீராணம் இல்லத்தில் நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார். அப்போது அவர் கூறியதாவது:-

திண்டிவனத்தில் 48 கிணறுகளிலிருந்து குடி தண்ணீர் பெறப்படுகிறது. அவற்றில் ஆறு கிணறுகளில்தண்ணீர் வற்றி விட்டது. மற்ற கிணறுகளில் தண்ணீர் இருக்கிறது அவற்றை மேலும் ஆழப் படுத்த உத்தரவிடப்பட்டுள்ளது.

மேலும் 84ஆம் குழாய் கிணறுகள் உள்ளன. அவற்றில் 20 கிணறுகள் பழுதடைந்துள்ளன. அவை இன்னும் 2 அல்லது மூன்று நாட்களில் சரிசெய்யப் படும்.

தமிழ்நாடு முழுவதும் குடிதண்ணீர் எடுக்கப்படும் கிணறுகள் ஆழப் படுத்தப்படுகின்றன. அதற்காக ரூபாய் 68 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. ஆற்றுப்படுகைகளில் ஆழ் குழாய் கிணறுகள் தோண்ட 3லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

விழுப்புரத்தில் கிணறுகளில் வேண்டிய அளவு தண்ணீர் வசதி இருக்கிறது. அதை எடுத்து உபயோகிக்க விரைவில் "ஜெனரேட்டர்" ஒன்று வாங்கப்படும்.

இவ்வாறுஏ.பத்மநாபன் கூறினார். தென்ஆற்காடு மாவட்ட கலெக்டர் நாகராஜன் மற்றும் அதிகாரிகள் உடன் இருந்தனர்.

### திருமணம்

காரைக்குடி குறள் பித்தனின் மகள் தமிழரசிக்கும் முத்தையா பிள்ளை மகன் கணேசனுக்கும் வரும் 31ந் தேதி காலை 9 மணிக்கு காரைக்குடி கம்பன்மணிமண்டபத்தில் அமைச்சர் ஆர்.எம்.வீ. மணவிழா வை நடத்தி வைக்கிறார். குன்றக்குடி அடிகளார் தலைமைவகிக்கிறார்.

# புரட்சிதலைவர் நலம் பெற்றதற்காக ஏழைகளுக்கு அன்னதானம்

சென்னை, மே. 23 — முதல்வர் புரட்சித் தலைவர் பூரண குணமடைந்துமீண்டும் தமிழக முதல்வராக பொறுப் பேற்றதை முன்னிட்டு மீஞ்சூரில் அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் 1,500 பேருக்கு உணவு வழங்கினார்.

மீஞ்சூர் அருகேயுள்ள மேட்டூர்கிராமத்தின் பக்கத்திலுள்ள மேட்டுப் பாளையத்தில் நடைபெற்ற இவ்விழாவில்அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் உணவு வழங்கினார்.

இந்த நிகழ்ச்சியில் குடிநீர் வாரியத் தலைவர் எஸ்.டி. உக்கம் சந்த், குழாய் கிணறு வாரியத் தலைவர் ஜே.சி.டி. பிரபாகரன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

பொன்னேரி தொகுதியில் உள்ள எளியம்பேடு இலவம்பேடு அனுப்பம் பட்டு தேவதானம், காளியம்பாக்கம் ஆகிய கிராமங்களில் 4 லட்ச ரூபாய் செலவிலான குடிநீர் திட்டத்தை அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் துவக்கி வைத்தார்.

பொன்னேரி பேருராட்சியில்சலவைத்தொழிலாளர்களுக்கான பணிமனை கட்டித்தையும் அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் துவக்கிவைத்தார்.

# இந்தியாவுக்கு ரஷ்யா தாராளகடன் உதவி

## ரூ. 1100 கோடி அளிக்க ஒப்பந்தம்

மாஸ்கோ, மே. 23- நவீன இந்தியாவை உருவாக்க, பல்வேறு திட்டங்களை நிறைவேற்ற சோவியத் யூனியன் இந்தியாவிற்கு 1100 கோடி ரூபாய் கடன் உதவி அளிக்கிறது. இதற்கான ஒப்பந்தத்தில், பிரதமர் ராஜீவ்காந்தியும், சோவியத் யூனியன் அதிபர் கோர்பசேவும் கையெழுத்திட்டனர்.

கிரெம்ளின்மாளிகையில் பிரதமர்ராஜீவ்காந்தியும், சோவியத் அதிபர்கோர்பசேவும் 3½ மணி நேரம் ஆலோசனை நடத்தினர்.

இந்த ஆலோசனையின் போது, உதவியாளர்கள் யாரும் இல்லை. மொழி பெயர்பாளர்கள்மட்டுமே இருந்தனர்.

இந்தப் பேச்சு வார்த்தைக்குப் பின், இரு நாடுகளுக்கும் இடையேயான ஒப்பந்தம் கையெழுத்தானது.

### புதிய மின்நிலையம்

இந்தியாவில் பல்வேறு திட்டங்களைநிறைவேற்ற சோவியத்யூனியன் இந்தியாவிற்கு1,100கோடிரூபாய் (100 கோடி ரூபிள் கடன் உதவி அளிக்கிறது.

உதவித் தொகைளைக் கொண்டு,840மெகாவாட் உற்பத்தி திறனுடைய மின் உற்பத்தி நிலையம் அமைக்கப்படும்.

ஜாரியா, சிங்க்ரெளலி, சிதமாலா ஆகிய இடங்களில் திறந்த வெளி நிலக்கரி வயல்களை அமைக்கவும், இந்த கடனுதவி பயன்படுத்திக் கொள்ளப் படும். எண்ணெய் ஆய்வு துறையிலும் சோவியத் யூனியனின் உதவி பயன்படுத்திக் கொள்ளப் படும்.

இந்த சடன்தொகை இந்திய ரூபாய்களில் திருப்பித்தரப்படும்,

அந்தத்தொகைக்கு இந்தியப்பண்டங்களாக வாங்க சோவித்யூனியன் ஒப்புக்கொண்டுள்ளது.

ஒப்பந்தங்கள் கையெழுத்திடப்பட்ட நிகழ்ச்சியில் சோவியத் நாட்டுத்தலைவர்களும், பிரதமர் ராஜீவுடன் சென்றவர்களும் பங்கேற்றனர்.

ஒப்பந்தம் கையெழுத்தான பிறகு, பிரதமர் ராஜீவ்காந்தியும், அதிபர் கோர்பசேவும் கைகுலுக்கிக் கொண்டனர்.

தமது அரசம் சோசலிசம் மற்றும் மத சார்பின்மைக் கொள்கைகளை கடைபிடிக்க விரும்புகிறது.

வரும் ஆண்டுகளில் இந்திய சோவியத் நட்புறவு மேலும் வளரும்

இவ்வாறு பிரதமர் ராஜீவ்காந்தி கூறினார்.

### இந்திராவுக்கு லெனின் விருது

இந்திரா காந்திக்கு அளிக்கப்பட்ட லெனின் சமாதான விருதை தமது தாயாரின் சார்பில் பிரதமர் ராஜீவ் பெற்றுக் கொண்டார்.

இந்த நிகழ்ச்சியில் பேசுகையில் பிரதமர் ராஜீவ் காந்தி கூறியதாவது:—

புத்தரும், மகாத்மா காந்தியும் தோன்றிய இந்திய நாடு அமைதியையும், சமாதானத்தையும் விரும்புகிறது.

நேரு, இந்திரா காந்திஅரசுசளைப்போல

### நடைமுறைகளை மீறிய நட்பு

பிரதமர் ராஜீவ்காந்தியுடன் ஆலோசனை நடத்த வந்த சோவியத் அதிபர்கோர்பசேவ் நடைமுறைகளை மீறி ராஜீவ் தங்கியிருந்தஇடத்திற்கு 10 நிமிடம் முன்னதாகவே வந்தார்.

பிறகு இருவரும் ஒன்றாக ஆலோசனை நடத்தும் இடத்திற்கு சென்றனர்.

போகும் வழியில்அதிபர் கோர்பசேவ் சில மலர்களைப் பறித்து ராஜீவ் காந்தியிடம் அளித்தார்.

அதே போல் குறிப்பிட்ட நேரத்திற்கு மேலும் அதிபர் கோர்பசேவும் பிரதமர் ராஜீவ் காநதியும் பேசிக்கொண்டிருந்ததும் குறிப்பிடத்தக்கது.

### நேரு சதுக்கத்தில்

பிரதமர் ராஜீவ் காந்திக்கு மாஸ்கோவில் வரவேற்பு அளிக்கப் பட்டது.

இதன் பிறகு பிரதமர் ராஜீவ், மனைவி சோனியாவுடன் ஜவஹர்லால் நேரு சதுக்கத்திற்கு சென்றார்.

ராஜீவ்காந்தியின் மகன் ராகுலும், மகள் பிரியங்காவும் உடன் சென்றனர்.

மாஸ்கோவில் வாழும் இந்தியர்கள் இந்த வரவேற்புக்கு ஏற்பாடு செய்திருந்தனர்.

### லெனினுக்கு அஞ்சலி

பிரதமர் ராஜீவ்காந்தியும் அவரது மனைவியும் லெனின் நினைவாலயத்திற்கு சென்று பதப்படுத்தி வைக்கப்பட்டுள்ள லெனின் உடலைப் பார்த்து மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

போர்காலத்தில்இறந்த வீரர்களுக்கான நினைவிடத்திலும் ராஜீவ்காந்தி மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

அங்கு வந்த போது பிரதமர் ராஜீவ்காந்திக்கு ராணுவ மரியாதை அளிக்கப்பட்டது.



### டெலிவிஷன் பேட்டி

சோவியத் டெலிவிஷனில் பிரதமர் ராஜீவ் பேச்சு ஒளிபரப்பப்பட்டது. ஏராளமான சோவியத் மக்கள் தங்கள் இல்லங்களில் பிரதமர் ராஜீவ் பேட்டியை காண குழுமியிருந்தனர்.

## உலக அரங்கில்

### ஒரே பிரசவம்: 7 குழந்தை பெற்ற மகராசி

கலிபோர்னியா மே23 கர்ப்பம் தரிப்பதற்காக மாத்திரை சாப்பிட்ட ஒருபள்ளி ஆசிரியை ஒரேபிரசவத்தில் ஏழு குழந்தைகளைப் பெற்றாள்.

அமெரிக்காவில் கலிபோர்னியாவில் வசித்து வரும் இந்தப்பள்ளி ஆசிரியையின் பெயர் புருஸ்ட்சி. (வயது 30) இவருக்கு பல ஆண்டுகளாகக் குழந்தையே பிறக்கவில்லை. கடைசியாக புருஸ்ட்சியும் அவளது கணவரும் ஒரு டாக்டரிடம் ஆலோசனைப் பெற்றனர்.

அந்த டாக்டர் எழுதிக் கொடுத்த மாத்திரையை புருஸ்ட்சி தொடர்ந்து சாப்பிட்டு வந்தாள். கர்ப்பம் தரித்தாள்.

இருபத்தி எட்டு வாரங்களுக்குப்பின்னால், திடீரென்றுஇவளுக்குபிரசவ வலி ஏற்பட்டது. மருத்துவமனையில்அனுமதிக்கப்பட்டாள்.

அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. புருட்ட்சிக்கு 7 குழந்தைகள் பிறந்தன. முதல் குழந்தை மட்டும் இறந்துவிட்டது. ஆறு குழந்தைகளும் நலமாக இருக்கின்றன.

## பாகிஸ்தான் அணுகுண்டு தயாரிப்பதை

# அமெரிக்கா தடுக்காததுஏன்?

### பிரதமர் ராஜீவ் வருத்தம்

**மாஸ்கோ. மே. 23- பாகிஸ்தான் அணுகுண்டு தயாரிப்பதை அமெரிக்கா தடுக்காமல் இருக்கிறது என்று பிரதமர் ராஜீவ் காந்தி கூறினார்.**

மாஸ்கோவில் வெளிநாட்டுப் பத்திரிகைகள் மையத்தில் நடந்த பத்திரிகையாளர் கூட்டத்தில் பிரதமர் ராஜீவ் காந்தி பேசினார்.

அவர் கூறியதாவது:-

சோவியத் தலைவர்களுடன் பேசும்போது ஆப்கானிஸ்தானம் பற்றி பேசவில்லை.

ஆப்கானிஸ்தானம் பற்றி இந்தியாவின் கொள்கை தெளிவானது எந்தநாடும் மற்றொரு நாட்டின் உள்நாட்டு விவகாரத்தில் தலையிடுவதை இந்தியா விரும்பவில்லை.

#### பெருத்த கவலை

பாகிஸ்தான் அணுகுண்டு தயாரிக்கஇருப்பது இந்தியாவுக்கு பெருத்த கவலையை அளித்துள்ளது.

இதுபற்றி நாங்கள் விவாதித்தோம் இந்தியாவிலும் இதுபற்றி விவாதிக்கப்படுகிறது.

அணுகுண்டு தயாரிக்க வேண்டாம் என்று பாகிஸ்தானை அமெரிக்கா தடுக்கமுடியும் அப்படியிருந்தும் அமெரிக்கா அவ்வாறு தடுக்கவில்லை. இது எங்களுக்கு வருத்தத்தை அளிக்கிறது.

அமெரிக்க ஜனாதிபதி ரீகனை நான் ஒருதட்வை மட்டுமே சந்தித்துப் பேசியுள்ளேன். அவரை மீண்டும் சந்தித்துப் பேச ஆவலுடன் இருக்கிறேன்.

#### நல்லுறவு

இந்தியா— அமெரிக்கா நட்புறவு நல்லபடி உள்ளது.

அமெரிக்காவுடன் தான் இந்தியா அதிக அளவில் வாணிபத் தொடர்பு கொண்டுள்ளது,

தொழில் நுட்ப உதவியையும்அவர்களிடம் இருந்து எதிர் நோக்குகிறோம்.

பாகிஸ்தானைச் சேர்ந்த ஒருவர் அணுகுண்டு தயாரிக்கும் தொழில் நுட்பத்தை அமெரிக்காவிலிருந்து திருடிக் கொண்டு கடத்த முற்பட்டிருக்கிறார்.

சுங்க அதிகாரிகள் அவரை கைதுசெய்தனர். பின்னர் என்ன காரணத்தாலோ அவர் பாகிஸ்தானுக்குச் செல்ல அனுமதிக்கப்பட்டார். வழக்கு அத்தோடு முடிந்தது-

பாகிஸ்தான்அனுகுண்டு தயாரிப்பதை அமெரிக்கா கண்டும் காணாமல் இருக்கிறது.

1971ல் ஏற்பட்ட இந்திய - சோவியத் ஒப்பந்தம் இரு நாடுகளின் உறவுக்குப் பெரிதும்பயன் பட்டது, எதிர்காலத்தில் இந்த உறவு மேலும் வளரும் என்று நம்புகிறோம்.

இவ்வாறு பிரதமர் ராஜீவ்காந்தி கூறினார்.

அணு ஆயுத உற்பத்திப் போட்டியில் ஈடுபட வேண்டாம் என்ற வேண்டுகோளை ஏற்ற ஒரே வல்லரசு சோவியத் தான். ஆனால் அமெரிக்கா அந்த வேண்டுகோளை ஏற்கவில்லை.

#### விட்டுக் கொடுக்க மாட்டோம்

அமெரிக்கா உதவியளிக்கிறது என்பதற்காக எங்கள் கொள்கைகளை என்றும் விட்டுக் கொடுக்க மாட்டோம்.

அமெரிக்க ஜனாதிபதி ரீகனை சந்திக்கும்போது பஞ்சாப் தீவிரவாதிகள் அமெரிக்காவில் உதவி பெறுகிறார்கள் என்று கூறப்படுவது பற்றிப்பேச உள்ளேன்.

சோவியத் அதிபருடன் நடந்த பேச்சில், எனது அமெரிக்க பயணமும் இடம் பெற்றது.

ஆனால், அமெரிக்க அதிபருக்கு எந்தவித செய்தியையும் நான் கொண்டு செல்லவில்லை.

இந்தியாவிற்கு வருமாறு சோவியத் அதிபர் கோர்பசேவை அழைத்துள்ளேன்.

சோவியத் நாட்டுடன் நீண்டகாலநட்புறவுநிலவி வருகிறது.

ஆபத்துக் காலங்களில் இருநாடுகளும்ஒன்றுபட்டு பிரச்சினைகளை சமாளித்துள்ளது. எனக்கு முதலில் அழைப்பு விடுத்த நாடு சோவியத்தான்.

பாகிஸ்தான்அணுஆயுத உற்பத்திசெய்யதிட்டமிட்டிருப்பதுஉட்பட்பல்வேறு பிரச்சினைகள் குறித்து சோவியத் அதிபருடன் பேசினேன்.

இவ்வாறு பிரதமர் ராஜீவ் கூறினார்.

# பெண் டாக்டர் படுகொலை: வாலிபர் தலையை துண்டிக்க தீர்ப்பு

அபுதாபி. மே. 23— இந்தியப் பெண் டாக்டர் ஒருவரைக் கொலைசெய்த இந்தியர் ஒருவரை வாளால் வெட்டிகொல்ல நீதிமன்றம் உத்தரவிட்டுள்ளது. இந்தப் புதுமையான தீர்ப்பு வடக்கு ஐக்கிய அரபு கூட்டமைப்பு நாட்டில் வழங்கப்பட்டுள்ளது.

இந்த சம்பவம் பற்றிய விபரமாவது:-

கடந்த அக்டோபர் மாதம் இந்தியப் பெண் டாக்டர் ஒருவரை [illegible] அடிக்க

இந்தியாவைச் சேர்ந்த முகமதுஜலால் என்பவர் கொலை செய்த விவரம் செய்திதாள்களில்வந்தது.

இதைத் தொடர்ந்து முகமது ஜலால் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப் பட்டார். நீதிமன்ற விசாரணைக்குப் பின் ஜலால்தான் இந்தக் கொலையைச் செய்தார் என்பது நிரூபணமாயிற்று.

ஈவிரக்கமின்றி ஒரு பெண்ணை துடிதுடிக்க கொன்ற ஜலாவின் நடவடிக்கையை வன்மையாகக் கண்டித்த நீதிமன்றம் கொடுஞ் செயல் புரிந்த ஜலாலுக்கு புதுமையான தண்டனையையும் விதித்தது. ஜலால் வாளால் வெட்டிக் கொல்லப்படவேண்டும் என்பதுதான் அந்த நீதிமன்றம் தீர்ப்பை அளித்த தீர்ப்பு. இந்த கைமா நகரிலுள்ள இஸ்லாமிய நீதிமன்றம் வழங்கியுள்ளது.

இந்த நாட்டில் இதுவரை யாருக்கும் இவ்வளவு கொடுமையான தண்டனை வழங்கப்படவில்லை. மரண தண்டனை விதிக்கப் பட்டவர்கள் துப்பாக்கியால் சுட்டப்பட்டு சாகடிக்கப் படுவது தான் வழக்கம். முதன் முறையாக ஜலாலுக்குத் தான் வாளால் வெட்டிக் கொல்லும் தண்டனை வழங்கப்பட்டுள்ளது.

ஜலாலுக்கு விதிக்கப் பட்ட தண்டனை பொது இடத்தில் வழங்கப்படுமா அல்லது யாருக்கும் தெரியாது அறைக்குள் வைத்து தண்டனைவழங்கப்படுமா என்பதும் தெரியவில்லை.

### ரஷ்ய மொழியில் மகாபாரதம்

மாஸ்கோ, மே. 23- மாஸ்கோவில் உள்ள பதிப்பகம் ஒன்று ரஷ்ய மொழியில் மகாபாரதத்தைவெளியிட்டுள்ளது.

இந்தப் புத்தகம் ஒரு லட்சம் பிரதிகள் அச்சிடப்பட்டன.

ஒரு லட்சம் பிரதிகளும் விரைவில் விற்றுவிட்டன.

இப் புத்தகத்தின் முதல் பதிப்பு ஏற்கனவே, 1964-ல் வெளியிடப்பட்ட போதும். தற்போது போலவே அனைத்துப் பிரதிகளும் விற்றது குறிப்பிடத்தக்கது.

தற்போதைய 2ம் பதிப்பிலும்முன்பைப்போலவே அனைத்துப் பிரதிகளும் விற்றுவிட்டன.

### இதய துடிப்பை அறிய புதிய கருவி

பல்கேரியா, மே. 23— பல்கேரிய நாட்டின் மருத்துவ விஞ்ஞான ஆய்வுக்கழகம் இதயத் துடிப்பைஅறியநவீனகருவி ஒன்றை உருவாக்கி உள்ளது.

இதன் மூலம் ஒரு மனிதனின் இதயத்தை40 விநாடிகளில் பரிசோதித்து விடலாம்.



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34 Nelson Manickam Road, MADRAS—600 029.

# குடிநீர் தர ஒரே ஆண்டில் ரூ.75 கோடி செலவிட தமிழக அரசு திட்டம்

**சென்னை, மே. 23- குடிநீர் சப்ளை செய்ய இந்த ஆண்டு ரூபாய் 75 கோடி செலவிட திட்டமிடப்பட்டுள்ளது என்று குடிநீர் வடிகால் வாரியத்தலைவர் உக்கம்சந்த் கூறினார்.**

"நீரின்றி அமையாது உலகு" என்பது வள்ளுவன் வாக்கு. மனித சமுதாயத்துக்கு மட்டுமின்றி, உலகில் தோன்றிய அனைத்து ஜீவராசிகளுக்கும் தண்ணீர்அவசியமானதுதான்.

வான் பொழிந்து நீர் நிலைகள் நிறைந்தாலும் அவற்றில் கிடைக்கும் நீர் சுகாதாரமானதாக இருக்கிறதா என்றால் இல்லை. பல்வேறு சுகாதாரக்கேடுகள் நிறைந்துள்ள உலகில் பாதுகாக்கப்பட்ட குடிநீர் இன்றியமையாத ஒன்றாக உள்ளது.

இவ்வளவு முக்கியமான ஒன்று சுதந்திரம் பெற்று எத்தனையோ ஆண்டுகள் ஆகியும் எல்லா மக்களுக்கும் தாராளமாக வழங்க முடிகிறதா என்றால் இல்லை என்று தான் கூறவேண்டும்.

பாதுகாக்கப்பட்ட குடிநீரை மக்களுக்கு வழங்க வேண்டும் என்பதையே முன்பிருந்த ஆட்சியாளர் மறந்திருந்தனர். மழலைகளுக்கு சத்துணவும், முதியோர்களுக்கு உடையும் இப்படி சமுதாயத்தில் அடிப்படை தேவைகளுக்காகப் போராடும் மக்களுக்கு அட்சயபாத்திரமாக விளங்கும் புரட்சித் தலைவர் ஆட்சியில் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கும் திட்டம் மிகவும் துரிதப்படுத்தப் பட்டுள்ளது.

## துரிதநடவடிக்கை

வறட்சிக்கு ஆளாகி இருக்கும் பகுதிகளில் குடிநீர் இன்றி மக்கள் சிரமப்பட்க் கூடாது என்பதை உணர்ந்து போர்க்கால அடிப்படையில் குடிநீர் திட்டங்களை புரட்சித் தலைவர் விரைவுபடுத்தியிருக்கிறார்.

புரட்சித் தலைவரின் ஆணையை சிரமேற்கொண்டு குடிநீர் வழங்கும் பணியில் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டிருக்கும் குடிநீர் வாரியத்தலைவர் உக்கம்சந்த்தை அணுகிக் கேட்டபோது அவர் கூறிய விவரங்களை இங்கு தொகுத்து வழங்குகிறோம்.

உக்கம்சந்த் கூறியதாவது:

மனித் சமுதாயத்திற்கு பாதுகாக்கப்பட்ட குடிநீர் என்பது மிகமிக இன்றி அமையாதது. தமிழக மக்களின் எல்லாப் பிரச்சினைகளும் புரட்சித் தலைவரால்தீர்க்கப்பட்டு வருவது போல் குடிநீர் பிரச்சினையும் அவராலேயே தீர்த்து வைக்கப் படுகிறது.

## ரூ.150 கோடி திட்டம்

தமிழகத்தில் உலகவங்கி உதவியுடன் பாதுகாக்கப் பட்டகுடிநீர்வழங்குவதற்காக 149 கோடியே 50 லட்சம் ரூபாய் செலவில் திட்டமிடப்பட்டு இந்த மாதம் 1-ந் தேதி முதல் பணிகள் துவங்கியுள்ளன.

இந்தத் தொகையில்மூன்றில் ஒரு பங்கை உலக வங்கி நிதியாக தருகிறது. மீதியை தமிழக அரசு கொடுக்கிறது. கோவை மதுரை, சேலம் ஆகிய மாவட்டங்களில் உலக வங்கி திட்டத்தின்கீழ் மக்களுக்குபாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கும் பணிகள் துவங்கியுள்ளன.

## ஒரே ஆண்டில் 75 கோடி ரூபாய்

தமிழகத்தில் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்க இந்த ஆண்டு மட்டும் 75 கோடி ரூபாய் செலவிட அரசு திட்டமிட்டுள்ளது இதில் 50 கோடி ரூபாய் கிராமப் புறங்களுக்கும் 25 கோடி ரூபாய் நகர் புறங்களுக்கும் குடிநீருக்காக செலவு செய்யப்படவுள்ளது.

குடிநீர் பிரச்சினையை தீர்க்க குடிநீர் வாரியம் தன்னை முழுமையாக ஈடுபடுத்தி பணிகளைச் செய்து வருகிறது.

வறட்சியின் காரணமாக சேலம், திருச்சி, மதுரை மாவட்டத்தில் ஒரு பகுதி, தர்மபுரி மாவட்டம் அரூர்தாலுகா ஆகிய இடங்களில் குடிநீர் தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது. இந்த இடங்களில்குடிநீர்பிரச்சினையை போக்க வாரியம் போர்க்கால அடிப்படையில் ஈடுபட்டுள்ளது.

நிலத்தடிநீர் மூலம் மக்களுக்கு குடிநீர் வழங்க ஆழ் குழாய் கிணறுகள் அமைக்கப் பட்டுள்ளன. மேலும் நிலத்தடிநீர் குறைந்த பகுதிகளிலுள்ள குழாய்களுக்குப்பதிலாக வேறு இடங்களில் மாற்று குழாய்கள் அமைக்கப் பட்டு அவற்றின் மூலம் குடித்தண்ணீர் வழங்கப்படுகிறது.

## முதல்வர் துவக்குகிறார்

உலக வங்கி திட்டத்தின் கீழ் 11 மாவட்டங்களில் உள்ள நகராட்சி, மாநகராட்சி மற்றும் கிராமப் புறங்களுக்கு குடிநீர்வழங்கும் பணி துவக்கப்பட்டுள்ளது.

உலகவங்கி திட்டத்தின் கீழ் நடைபெறும் குடிநீர் வழங்கும் திட்டத்தை முதல்வர் புரட்சித் தலைவர் துவக்கி வைக்கிறார்.

சேலம், தருமபுரி ஆகிய மாவட்டங்களில் குடிநீர் பிரச்சினையைப் போக்க 650 ஆழ்துளை குழாய்கள் அமைக்கப்படுகின்றன. அடுத்த மாதம் (ஜுன்) 30ந் தேதிக்குள் இந்தப் பணிகள் முடியும்.

மேலும்இந்த மாவட்டங்களில்ஏற்கனவே அமைக்கப் பட்டு நிலத்தடிநீர்குறைந்த 400 ஆழ் துளைக்குழாய்கள்மாற்றிஅமைக்கப்படுகின்றன. மேலும் தேவைப் பட்டால் ஆழ் துளை குழாய்கள் அமைக்கபடும்.

உப்புத் தண்ணீரைக் குடிநீராக மாற்றும் திட்டம் அம்பத்தூர் அருகே பரீட்சார்த்த அடிப்படையில்சோதிக்கப் பட்டது. இந்ததிட்டத்தை குஜராத்திலிருந்து வந்த நிபுணர்கள் பார்த்துச் சென்றனர். இது நல்ல பயனைத் தந்துள்ளது. தேவைப்பட்டால் இத் திட்டம் தமிழகத்தில் மேலும் பல இடங்களுக்கு விரிவுபடுத்தப்படும்.

## ஐரோப்பிய ஒத்துழைப்பு

கோவை மாவட்டத்தில் கிடைக்கும் நீரில் ப்ளோரைடு உள்ளது. இது பற்களுக்கு சேதம் விளைவிக்கக் கூடியது. ஐரோப்பிய அமைப்பின் ஒத்துழைப்புடன் இந்த நீரை நல்ல நீராக மாற்ற நடவடிக்கைஎடுக்கப்பட்டு வருகிறது. இத்திட்டத்துக்கு அந்த அமைப்பு 16 கோடி ரூபாய் மானியம் வழங்கியுள்ளது. மீதி 14 கோடி ரூபாயை மாநிலஅரசு செலவழித்து ப்ளோரைடு அகற்றப் பட்ட நீர் வழங்க நடவடிக்கை மேற்கொள்ளப் பட்டுள்ளது.

பெரியார், கோவை மாவட்டங்களில் 774 கிராமங்களுக்கு இந்த ஆண்டுபாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்க திட்டமிட்டு நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

முதல்வர் புரட்சித் தலைவரின் தொகுதியான ஆண்டிப்பட்டி தொகுதி முழுவதும் சுற்றி வந்தேன். சில பத்திரிகைகளில் குறிப்பிட்டுள்ளது போல் அங்கு குடிநீர்பிரச்சினை இல்லை.

## ஆண்டிப்பட்டிக்கு 2.5. கோடிக்கு திட்டம்

ஆண்டிப்பட்டி தொகுதியில் 2 கோடியே 50 லட்ச ரூபாய் செலவில் இந்த ஆண்டு குடிநீர் திட்டங்கள்நிறைவேற்றப் பட்டுள்ளன. 325 ஆழ்துளை கிணறுகள் அமைக்கப்பட்டுள்ளன. ஆண்டிப் பட்டி தொகுதியில் 78 மேல் நிலை தொட்டிகளும்கட்டப்பட்டுள்ளன. இந்தப்பகுதிகளில் குழாய்கள் மூலம் குடிநீர் வழங்க 2 கோடியே 50 லட்ச ரூபாயில் திட்டங்கள் நிறைவேற்றப் பட்டுள்ளன.

விருதுநகர், திண்டுக்கல் சிவகெங்கைபோன்ற புதிதாகபிரிக்கப்பட்டமாவட்டங்களின்தலை நகர்களுக்குக் குடிநீர் வழங்கஅபிவிருத்தித் திட்டத்தின்கிழ் தலா 5 கோடி ரூபாய் செலவிடப்படவுள்ளது.

தமிழகத்தில் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கப் படாதகிராமமமே இல்லை என்பதை உருவாக்க குடிநீர்வாரியம்முனைப்புடன் செயல்படுகிறது. முதல்வர் புரட்சித் தலைவரின் ஆசியுடன் இந்த இலக்கை எட்டுவோம்.

இவ்வாறு உக்கம்சந்த் கூறினார்.

-பாலுமணி

## சுழலும் கார் பார்க்

சுழலும் கார் பார்க் ஒன்றை ஆஸ்திரேலிய ஆராய்ச்சியாளர் கண்டு பிடித்துள்ளார்.

16 கார்கள் மட்டுமே நிறுத்தக் கூடிய இடத்தில் 256 கார்கள் நிறுத்தத் தக்க வகையில் இந்த சுழலும் கார்பார்க்கை அவர் அமைத்துள்ளார் அதற்குப் பெயர் ரோட்டோபார்க்

நிலத்தின் விலை மிக அதிகமாக உள்ள நகரங்களுக்கும் கார் நிறுத்த இடவசதி இல்லாத நகரங்களுக்கும் இது சிறந்தது.

## அமைச்சர் கே. ஏ. கே. திறந்த புதிய கோழி பண்ணைகள்

வேலூர், மே. 23— வடஆற்காடு மாவட்டம் அணைகட்டு தொகுதியில் முருகன் நகர் கிராமத்தில் தமிழக அரசின் சிறப்புக் கூட்டமைப்பு திட்டத்தின் கீழ் தொழிலாளர் நலத் துறை அமைச்சர் கே. ஏ. கே 50 கோழிப் பண்ணைகளை தொடங்கி வைத்தார்.

இவ்விழாவிற்கு கோழி வளர்ப்பு நிறுவனத்தின் தலைவர் கே. ஆர். ஆர் கல்யாணி தலைமை தாங்கி சிறப்புரையாற்றினார்.

அதில் சட்டமன்ற உறுப்பினர்கள், கிருஷ்ணசாமி, ராஜாபாபு சிறப்புரை ஆற்றினார்கள்.

மற்றும்பலரும் நிகழ்ச்சியில் பங்கேற்றனர்.

# 1.18 கோடி கார்டுகட்கு மலிவு விலையில் அரிசி: திருநாவுக்கரசு தகவல்

**திருவாரூர் மே 23 தமிழ்நாட்டில் 1 கோடியே 18 லட்சம் குடும்பங்களுக்கு ரேஷன் கார்டுகள் மூலம் மலிவு விலையில் அரிசி வழங்கப்படுகிறது என்று அமைச்சர் திருநாவுக்கரசு குறிப்பிட்டார்**

திருவாரூரை அடுத்த கல்யாண மகாதேவியில் ரூபாய் 70 ஆயிரம் செலவில் தேசிய ஊரக வேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் கட்டப்பட்ட சமுதாய நலக் கட்டிடத்தை திறந்து வைத்து உணவு அமைச்சர் எஸ். திருநாவுக்கரசு பேசினார்.

அவர் கூறியதாவது:—

1977ல் புரட்சித் தலைவர் முதல்வர் பொறுப்பேற்றபின் அடிப்படை வசதியில்லாத கிராமங்கள், வளர்ச்சி பெறாத நகரங்கள் வளர்ச்சி அடைவதற்கு தன்னிறைவுத் திட்டம் கொண்டுவந்தார். இணைப்புச்சாலைகள் மருத்துவமனைகள், பள்ளி கட்டிடங்கள், குடிநீர்வசதி மின்சார வசதி இப்படி கிராமங்களுக்கு வேண்டிய அனைத்து தேவைகளையும் நினைவில் கொண்டு தன்னிறைவுத் திட்டம் கொண்டு வந்து அவைகளை நிறைவேற்றி வைத்துள்ளார்.

ஒரு ஊராட்சி ஒன்றியம் தன் வருமானத்தைக்கொண்டு தன் சுய தேவைகளை பூர்த்தி செய்து கொள்ள இயலாது. எனவே ஒரு ஒன்றியத்திற்கு ரூபாய் 40 இலட்சம் முதல்ரூபாய் 60 இலட்சம் வரை ஒதுக்கீடு செய்து அந்த ஊராட்சிக்கு வேண்டிய வசதிகள் அனைத்தும் செய்து தரப் பட்டன. ஏழை, எளிய மக்களின் வாழ்வை அடிப்படையாக கொண்டுதான் புரட்சித்தலைவர்திட்டங்களை தீட்டி வருகிறார்,

## அடிப்படை சொத்து

தமிழகம் முழுவதும் ரூபாய் 300 கோடிக்கான அடிப்படை சொத்துக்களை கடந்த 4 ஆண்டுகளில் புரட்சித்தலைவர் அரசு உருவாக்கியுள்ளது.

தமிழக வரலாற்றில் இரண்டு முறைக்கு மேல் முதல்வராக யாரும் பொறுப் பேற்கவில்லை மக்கள் தங்கள் பிரச்சினைகளை தீர்க்கும் மகானாக புரட்சித்தலைவரை ஏற்றுக் கொண்டுள்ளார்கள் புரட்சித்தலைவரின் உடல் நன்கு நன்றாக குணமாகிவிட்டது, நல்ல தெம்பாக இருக்கிறார், பொது நிகழ்ச்சிகளில் புரட்சித் தலைவர் விரைவில்பேசப் போவதை மக்கள் காண இருக்கிறார்கள்.

உடல் நலத்தையும் பொருட்படுத்தாது 3மணி நேரம் பயணம் செய்து டெல்லி சென்று, 7-வது ஐந்தாண்டு திட்டத்திற்கு தமிழ்நாட்டுக்கு பணஒதுக்கீடு அதிக அளவு பெற்றுத் தந்தார். 5,800 கோடி ரூபாய் 7-வது ஐந்தாண்டு திட்டத்திற்கு ஒதுக்கப் பட்டுள்ளது.

கடந்த 7 ஆண்டுகளில் தமிழ்நாட்டில் நடந்துள்ள பணிகள் கடந்த 30 ஆண்டுகளில் நடந்துள்ள பணிகளைவிட அதிகம். அரசு எவ்வளவுதான் திட்டம் தீட்டினாலும் அவற்றை செம்மையாக நிறைவேற்றும் பொறுப்பு அதிகாரிகளிடம் தான் உள்ளது.

புரட்சித்தலைவர் எந்த நோக்கத்தோடு200கோடி ரூபாய்சத்துணவுத்திட்டத்திற்கு செலவுசெய்கிறரோ அந்த நோக்கம் நிறைவேற்றப்பட வேண்டும். அந்தப் பணம் ஒழுங்காகசெலவு செய்யப் படுகிறதாஎன்பதை சட்டமன்ற உறுப்பினர்களும், பொதுமக்களும் அதிகாரிகளும்விழிப்புடன் இருந்து கண்காணிக்கவேண்டும்.

## விவசாயிகளின் நண்பன்

விவசாயப் பெருமக்களின் நன்மைக்காக புரட்சித்தலைவர் அரசு பல்வேறு நன்மைகளை செய்து வருகிறது. இந்தியாவிலேயே தமிழ்நாட்டில் மட்டும் தான் ரூபாய் 200 கோடிக்கு கூட்டுறவு கடனை ரத்து செய்துள்ளது. கூட்டுறவு கடனை ஒழுங்காக திருப்பிச் செலுத்தவேண்டும். அதிக வட்டிக்கு வெளியில் பணம் வாங்கி சிரமப்படக்கூடாதுஎன்ற அடிப்படையில் அரசுகூட்டுறவு சங்கங்கள் மூலம் குறைந்த வட்டிக்கு கடன் உதவி அளிக்கிறது. ஆகையால் வாங்கிய கடனை திருப்பிச் செலுத்த வேண்டும்.

அரிசி விலை ஏறாமல் புரட்சித்தலைவர் கவனித்து ஆட்சி நடத்துகிறார். மாதந்தோறும் 26,000 டன் அரிசியை சத்துணவுத் திட்டத்திற்கு இனாமாக அரசு அளித்து வருகிறது. 118 லட்சம் ரேஷன் கார்டுகாரர்களுக்கு 1 லட்சம் டன் அரிசி மாதந்தோறும் வழங்கப் படுகிற பொது விநியோகத்தில் ரேசன் அரிசியின்விலையை அரசு கடந்த 6 ஆண்டுகளாக உயர்த்தாமல் கிலோ ஒன்றுக்கு ரூபாய் 1.75, 2.00 என்ற விதத்தில் அளித் வருகிறது.

இதனால் ஏறபடும் 90 கோடி ரூபாய் நஷ்டத்தையும் பொருட்படுத்தாமல் குறைந்த விலையிலேயே விற்பனை செய்கிறது.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு பேசினார்.

விழாவில் 15 பேருக்கு வீட்டுமனைப்பட்டாக்கள் வழங்கப்பட்டன.

கோட்ட வளர்ச்சி அலுவலர் கதிரேசன் தலைமைவகித்தார். சட்டமன்ற உறுப்பினர்கள் எம். செல்லமுத்து பாப்பாசுப்ரமணியம், மக்கள் குழு உறுப்பினர்கள்பால்ராஜ், கருணாநிதி, மணலி இராசேந்திரன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள்.

## கோலப்பா எம். எல். சி. நிகழ்ச்சிகள்

மே. 24- தேனி, பெரியகுளம், 25-கொடைக்கானல்.

## வால்பாறையில் எம். ஜி. ஆர். கால் பந்து விளையாட்டு போட்டி குழு

வால்பாறை, மே 23— வால்பாறையில் டாக்டர் எம். ஜி. ஆர். கால்பந்து விளையாட்டு போட்டிக் குழு அமைப்புக்கூட்டம், கழக மாணவர் அணி அமைப்பாளர் வை.முத்தையா தலைமையில் நடைபெற்றது.

வால்பாறை நகர கழக செயலாளர் எம். சர்புதீன் தலைவராகவும் சோலையார்டேம் கழகச்செயலாளர் செ. சுபாசந்திர போஸ் காப்பாளராகவும் வை. முத்தையா அமைப்புச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## டெண்டர்

உதவி உப்பள ஆணையர் சாஸ்திரிபவன், சென்னை-6 அவர்களால் கீழே கண்ட வேலையைஏற்று செய்வதற்கான மூடி முத்திரையிட்ட டெண்டர்கள் 29.5. 1985ம் தேதி பிற்பகல் 3.00 மணி வரையில்ஏற்கப்படும்வேலையின் இ.எஸ்.டி. நெ.6/85—86—மரக்காணம் உப்புத் தொழிற்சாலையில்உப்பளத் தொழிலாளர் கூட்டுறவு உற்பத்தி மற்றும் விற்பனை சங்கத்தின் பி.எல்.க்கு நெடுஞ்சாலை சந்திப்பிலிருந்து தற்போதுள்ள சாலையை சீர் படுத்திதார்போடும் வேலை உத்தேச மதிப்பு ரூ.43402/- 2. வேலையின் இ. எஸ். டி. நெ.50/84-85 (ஏ)சென்னை வட்டம் கல்லாங் உப்பளத் தொழிற்சாலை எல்.நெ.88 பண்ட் (கரைக்கட்டு) தெற்குப் பகுதியில் அபிவிருத்திப்பணிகள் உத்தேச மதிப்பு ரூ. 81428/6 டெண்டருடன் கீழ்க்கண்ட வகையில் டேவணித் தொகை இணைக்கப்பட வேண்டிய முறைகள்.

ஏ) உதவி உப்பள ஆணையர், சென்னை-6அவர்களின் பெயருக்கு ஏதேனுமொரு நாட்டுடமையான பாங்கில் டிமாண்டு டிராஃப்டின்எடுத்து அல்லது பி) மேற்படி அலுவலரின் பெயருக்கு கேட்டதும் பணம் பட்டுவாடா ஆகும் பாங்க் பண ரசீது ஆகிய ஒன்றின் மூலம் செலுத்தப்பட வேண்டும். வேலைவிவரங்கள் அடங்கிய படிவங்கள்:-

ஏ) உப்பள கண்காணிப்பாளர், கட்லூர் வட்டம் கட்லூர் ஒ. டி.

(பி) உப்பள தொழிற்சாலை அலுவலர், மரக்காணம் உப்பளதொழிற்சாலை மரக்காணம் ஆகியோரிடமிருந்தும் முதல் வேலைக்கு மரக்காணம் அலுவலரிடமும் இரண்டாம் வேலைக்கு கல்லாங் உப்பள தொழிற்சாலை அலுவலரிடமும் 27-5-1985ம் தேதி வரை பெற்றுக்கொள்ளலாம்.

டிஏவிபி 563/49/85

குடும்பநல திட்டம் தீவிரப்படுத்தப் படுவதையொட்டி குடும்பநலத் திட்ட இயக்குனர் சோசம்மாவிடம் லாப்ராஸ்கோப் கருவியை அமைச்சர் டாக்டர் அண்டே வழங்கியபோது எடுத்த படம்.

# கால்நடை ஆஸ்பத்திரியில் கே. ஏ. கே. 'திடீர்' சோதனை

மதுரை, மே. 23— மதுரை காந்தி மியூசியம் அருகிலுள்ள கால் நடை மருத்துவமனைக்கு அமைச்சர் கே. ஏ. கே இன்று காலை திடீரென்று சென்று சோதனை நடத்தினார். அங்குள்ள எக்ஸ்ரே பிரிவு போன்ற பல பகுதிகளுக்கு சென்று அமைச்சர் கே.ஏ.கே. பார்வையிட்டார்.

அங்கிருந்த மக்கள் தெரிவித்த குறைகளைக் கேட்டு அமைச்சர் கே.ஏ.கே. அவைகளை உடனடியாக நீக்குமாறு அதிகாரிகளுக்குஉத்தரவிட்டார். அமைச்சர் கே.ஏ.கே. யுடன் மதுரை மாவட்ட பால்வள ஒன்றிய தலைவர் வெ. பாலகுரு, சட்டமன்ற உறுப்பினர் பாலுச்சாமி, மற்றும் பரமன் ஆகியோரும் சென்றிருந்தனர்.

# தமிழ் பண்பாட்டை இளைஞர்கட்கு உணர்த்த ஆர்.எம்.வீ. கோரிக்கை

**சென்னை, மே. 23- தமிழ்ப்பண்பாட்டை இளைஞர்களுக்கு உணர்த்தவேண்டும் என்று அமைச்சர் ஆர் எம் வீ கேட்டுக்கொண்டார்**

தர்மபுரம் ஆதீனமையத்தில் சைவ சித்தாந்தம் பற்றிய கோடைபயிற்சி முகாமை செய்தி அறநிலைத்துறை அமைச்சர் ஆர்.எம்.வீ. தொடங்கி வைத்தார்,

அப்போது அமைச்சர் ஆர். எம் வீ. பேசுகையில் கூறியதாவது:-

வேறு சில மாநிலங்களில் அமளிகள் ஏற்பட்ட போதிலும் தமிழகத்தில் நல்ல அமைதி நிலவி வருகிறது. இதற்குக் காரணம் பல மகான்கள் தான்றி தங்கள் இலக்கியங்களில் சகோதரத்துவம், சகிப்புத் தன்மை போன்றவற்றை வடித்து வைத்திருப்பதுதான்,

திருமறைகளில் புலமை பெற்றவர்கள் அவற்றில் உள்ள கலாச்சாரப் பெருமை, பண்பாடு பற்றிய விவரங்களை மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும்.

## திருமறை பரப்புவீர்

தமிழ்க் கலாச்சாரம், நாகரிகம், பண்பாடு போன்றவற்றை இளைஞர்கள் அறியச் செய்ய வேண்டும். தற்போதைய இளைஞர்களுக்கு அவற்றைக் கற்கும் வாய்ப்பு அதிகம் இல்லை.

தற்போதைய நவநாகரிக யுகத்திற்கு, அந்தப் பழங்கால கருத்துக்கள் ஒவ்வாது என்றும் சிலர் நினைக்க கூடும் அவை எக்காலத்திற்கும் பொருந்தக் கூடியவை.

சைவமும்வைஷ்ணவமும் இரு கண்களை போன்றவை. தமிழ்நாடு என்று நாம் இப்போது கூறுகிறோம். ஆனால்திருஞானசம்பந்தர் அந்நாளிலேயே தமிழ்நாடு என்ற வார்த்தையைப் பயன் படுத்தி யுள்ளார்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

## அமைச்சர் அண்டேயுடன் அரசு அலுவலர் கழகம் சந்திப்பு

சென்னை, மே 23— அரசு மருத்துவ மனைகளில் பணிபுரியும் செவிலிய உதவியாளர்களின் முக்கிய பிரச்சினைகள் குறித்து அமைச்சர் டாக்டர் அண்டேயுடன் தமிழ்நாடு அரசு அலுவலர் கழகத்தினர் விவாதித்தனர்.

தமிழ்நாடு அரசு அலுவலர் கழக (சி மற்றும் டி) மாநில பொதுச்செயலாளர் கி.க. மோகன், செவிலிய உதவியாளர் சங்கத் தலைவர் டி.சூரன், மற்றும் எம். ஆறுமுகம், ஜி. நடராஜ், ஏ. விக்டர் சுந்தரராஜ், சத்திவேல், ஆகியோர் பேச்சு வார்த்தை நடத்தினர்.

விவாதத்தின் போது மக்கள் நல்வாழ்வுத்துறை இயக்குநர் மருத்துவக் கல்லூரி இணை இயக்குநர் ஆகியோர் கலந்து கொண்டனர்.

## சட்டமன்ற துணைச் செயலாளர் மறைவு

சென்னை, மே. 23— தமிழக சட்டபேரவை துணைச் செயலாளர் ஆர். பாலகுரு நேற்றிரவு பழவந்தாங்கலிலுள்ள அவரது இல்லத்தில் திடீர் மாரடைப்பு காரணமாக இறந்தார்.

மறைந்த பாலகுருவுக்கு மனைவியும் மூன்று மகன்களும், 1 மகளும் உள்ளனர். பாலகுருவின் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் வகையில் சட்டமன்ற துறை ஊழியர்கள் கருப்பு பேட்ஜ் அணிந்துவந்தனர்.